உ

ஸ்ரீ கிருஷ்ணாய பரமாத்மனே நம:|

# ஸ்ரீமத் பாகவதத்திலுள்ள சில உபதேச மொழிகள்

கிருத யுகம், திரேதா யுகம், த்வாபர யுகம் இந்த மூன்று யுகங்களிலும் வைராக்யத்தாலும், ப்ருமக் ஞானத்தாலும் தான் முக்தி கிடைக்கும். கலியுகத்திலோ பக்தி ஒன்றே முக்தியைக் கொடுத்து விடும்.

எலும்பு, மாம்ஸம், ரெக்தம் முதலானவைகளின் பரிணாமமான சரீரத்தில் நான் என்ற அபிமானத்தை விடு. மனைவி, புத்ரன், வீடு, பணம் முதலானவைகள் என்னைச் சேர்ந்தவைகள் என்று எப்பொழுதும் எண்ணிக் கொண்டிருக்கும் எண்ணத் தை விடு. நாம் பார்க்கும் உலகமெல்லாம் அழிந்து கொண்டிருப்பது, நிலையற்றது. ஆகையால் உலகப் பற்றை விட்டு பகவானிடம் பக்தி செய். எப்பொழுதும் தர்மத்தை செய். பாபத்தையும், வீண் காரியத்தையும் செய்யாதே. ஸாதுக்களின் சேர்க்கையை யும், ஸேவையையும் நாடு. பேராசையையும், பிறர்களுடைய குண தோஷங்களின் சிந்தனையையும் உடனேயே விடு. பகவானுக்கு சேவை செய். பகவானுடைய ரஸமான கதைகளை ஆவலுடன் கேள்.

உறுதியில்லாத ஞானம், கவனமில்லாத கேள்வி ஞானம், ஸந்தேஹமுள்ள மந்திரம் மனம் ஈடுபடாத ஜபம், விஷ்ணு பக்தன் இல்லாத தேசம், வேதாத்யயனம் முதலான யோக்யதையில்லாத பிராமணனை வைத்துச் செய்யும் சிரார்தம், அத்ய யனம், ஆசாரமில்லாதவனுக்குச் செய்யும் தானம், ஆசாரமில்லாத குலம் இவைகள் பலனில்லாதவை. உபயோக மற்றவை.

ஸகல சாஸ்திராப்யாஸம், ஸ்வதர்மானுஷ்டானம் இவைகளால் மனுஷ்யன் அடையும் பலன் மரண காலத்தில் நாராயணஸ்மரணம். இது தான் மேலான லாபம்.

உலக விஷயங்களில் ஆசையில்லாதவனும், உலக விஷயங்கள் வேண்டும் என்று விரும்புபவனும் அல்லது மோக்ஷமே வேண்டும் என்று விரும்புபவனும் பகவானிடம் தீவிர பக்தி செய்ய வேண்டும். மனிதனுக்கு உலக விஷயப் பற்றுள்ள மனமே ஸம்ஸார பந்தத்திற்குக் காரணம். அதை விட்டு பகவானிடம் பக்தி ரூபமான பற்றுள்ள அதே மனம் மோக்ஷத்திர்க்குக் காரணம்.

நான் எனது என்ற அபிமானத்தாலுண்டான காமம், கோபம், லோபம் முதலான துர்குணங்கள் நீங்கி மனம் சுத்தமாகி விஷய ஸம்பந்தமான ஸுகமோ துக்கமோ இல்லாமல் மனதை ஸம நிலையில் நிறுத்தி ஸர்வாத்மாவான

பகவானிடம் பக்தி செய்வதே பிரும்ம ரூப ப்ராப்தியான மோக்ஷத்தையடைய முமுக்ஷுவிற்கு நல்ல மார்க்கம். இதற்கு ஈடாக வேறு வழி கிடையாது.

உலகப் பற்றே தனக்குப் பெரிய கட்டு. அந்தப் பற்றை ஸாதுக்களிடம் வைத்தால் மோக்ஷத்திற்கு வழி என்று அறிவாளிகள் கூறுகிறார்கள்.

பொறுமை, கருணை ஸர்வ பிராணிகளுக்கும் நன்மை செய்தல், தனக்கு சத்ரு இன்மை, சாந்தி இந்த குணங்கள் உடையவர்கள் ஸாதுக்களுக்குள் மேலானவர்கள்.

இந்த ஸாதுக்கள் ஒன்றிலும் பற்றில்லாதவர்கள். கெட்டவர்களின் சேர்க்கையால் உண்டான கெடுதல்களை நீக்குபவர்கள். அவ்வித ஸாதுக்களுடைய சேர்க்கை வேண்டத்தக்கது.

பலனைக் கருதாத பக்தி, தெளிவில்லாத ஞானத்தைக் காட்டிலும் மேலானது. அது மறுபிறப்பில்லாமல் செய்துவிடும்.

உலகம் உண்மையில் இல்லாததுதான். மாயையின் தோற்றமே. இருந்தாலும் மாயை என்ற அக்ஞானம் நீங்கும் வரையில் துக்கத்தைக் கொடுக்கவே செய்யும். ஸ்வப்னத்தில் ஏற்படும் பயம் விழிக்கும் வரை இருப்பது போல்.

பகவானிடம் பக்தி செய்தவன் பகனானுடைய பிரஸாதத்தால் ஞானத்தை அடைந்து ஸகல ஸம்சயங்களும் நீங்கி மோக்ஷத்தை அடைவான்.

பரமாத்மாவான பகவான் ஸர்வ பிராணிகளுடைய ஹிருதயத்திலும் நம்முடைய ஹ்ருதயத்திலு மிருக்கிறார். அவர் ஒருவரே எங்கும் உள்ளவர் என்று வேதாந்த ஞானம் வரும்வரை மனுஷ்யன் தனக்குரிய வர்ணாசிரம தர்மங்களைச் செய்து கொண்டு விக்ரஹாதிகளில் பகவானை ஆராதிக்க வேண்டும்.

நரகத்திலிருக்கும் கஷ்டமான சரீரத்துடனிருப்பவனும் அந்த சரீராபிமானத் தால் அதை விட்டு விட விரும்ப மாட்டான். மாயையால் உண்டான மோஹமே அதற்க்குக் காரணம். இந்த பூலோகத்தில் அனுபவிக்கும் துக்கங்களே நரக துக்கம். இங்கு அனுபவிக்கும் ஸுகங்களே ஸ்வர்க்க ஸுகங்கள். இதைத் தவிர நரகம், ஸ்வர்கம் என்பது வேறில்லையென்று சிலர் கூறுகிறார்கள்.

பரமசிவனுடைய சரித்ரம் ஸகல பாபங்களையும் போக்கும். அவருடைய ஆக்ஞையை ஒருவரும் மீறக்கூடாது. “சிவ” என்ற இரண்டு எழுத்துடைய அவரு டைய நாமத்டை அர்த்தம் தெரியாமல் வேறு ஏதோ வியவஹாரத்தால் ஒரு

தடவை கூறினாலும் ஸகல பாபங்களையும் போக்கும். அந்த பரமசிவனிடம் த்வேஷத்தால் தக்ஷன் அழிந்தான். ஆகையால் சிவ த்வேஷம் பாபம்.

பிரும்மா, விஷ்ணு, ருத்தர் மூவரும் உலகத்திற்குக் காரணமானவர்கள். பரமாத்மா, பரபிரும்மம், தன்னுடைய மாயா குணங்களால் மும்மூர்த்தி சரீரங்கள் தரித்து உலகத்தின் சிருஷ்டி, பரிபாலனம், ஸம்ஹாரம் இவைகளைச் செய்கிறார். அறியாத மூடர்கள் இவர்களை ஏற்றத்தாழ்வுடன் வெவ்வேறாகப் பார்க்கிறார்கள். அறிவாளிகளோ தங்களுடைய கால், கை அவையவங்களை வெவ்வேறு மனிதனா கப் பார்க்காமல் ஒரே மனிதனாகப் பார்ப்பது போல் மூன்று சரீரங்களுடைய பரமாத் மா ஒருவரே என்று அறிவார்கள்.

அவ்வித அபேத புத்தியுள்ளவர்களே சாந்தியுடனிருப்பார்கள். ஒருவரால் நமக்குக் கஷ்டம் ஏற்படும் பொழுது அவரிடம் கோபம் கொள்வது சரியில்லை. நாம் முன்பு (முன் ஜென்மத்தில்) ஒருவருக்குக்ச் செய்த கெடுதலே இப்பொழுது ஒருவர் மூலம் அனுபவிக்கப்படுகிறது என்று அறிந்து இனியாவது அவ்வித பாபத்தைச் செய்யாமலிருக்க வேண்டும். செய்த பாபம் நீங்க மனதை அடக்கி பகவானைத் தியானம் செய்து ஆராதிக்க வேண்டும். துக்கத்தை நிவிருத்தி செய்து கொள்ள வேறு உபாயம் கிடையாது.

ஒருவன் தான் ஸுகத்தை அனுபவிக்கும் பொழுது முன் செய்த புண்ய பலனை அனுபவிக்கிறோம் என்றும், துக்கத்தை அனுபவிக்கும் பொழுது முன் செய்த பாபம் நீங்குகிறது என்றும் அறிந்து ஸந்தோஷமாகவே இருப்பவன் ஞானியா வான்.

தன்னைக் காட்டிலும் குணங்களாலோ, பணம் படிப்பாலோ மேலானவனைக் கண்டு பொறாமைப் படாமல் ஸந்தோஷப் படவேண்டும். முன் கூறியவைகளில் தாழ்ந்தவனிடம் கருணை காட்ட வேண்டும். அவமதிக்கக் கூடாது. ஸமமாக உள்ளவனிடம் நட்பு கொள்ள வேண்டும். அஸூயை கூடாது. இவ்விதம் இருந்தால் சாந்தி ஏற்படும்.

எல்லோரிடமும் நட்பு, கருணை முதலான நற்குணங்களிருப்பவனுக்கு பகவானுடைய பிரஸாதம் ஏற்படும். அதனால் அடக்கமுள்ள அவனுக்கு எல்லோ ரும் மரியாதை செய்வார்கள். பள்ளத்தை நோக்கி ஜலம் ஓடுவது போல்.

எந்த அரசனுடைய ராஜ்யத்தில் ஜனங்கள் தங்களுடைய வர்ணாசிரம தர்மங்களால் யக்ஞ புருஷனான பகவானை ஆராதிக்கிறார்களோ அந்த அரசனிடம்,
“இவன் நம்முடைய தர்ம விதியை அனுஸரித்து நடக்கிறான்” என்று பகவான் ஸந்தோதமடைகிறார்.

புத்த மதம், ஜைன மதம் இது போன்ற மதங்கள், நம்முடைய வேத சாஸ்திரங்களுக்கு முரணானவைகள். அவர்களுடைய சிகபு வஸ்திரம்,

நிர்வாணம் முதலான வேஷங்கள் பாகண்டம் (பாஷண்டம்) பாபத்தின் அடையாளம் என்றும் உபதர்மம் (தர்மம் போல் தோற்றமளிப்பது) என்றும் அறிந்து விவேகமுள்ளவன் அவர்களுடைய சாதுர்யமான மதப் பிரசாரத்தில் மயங்கக் கூடாது. நமது பாரதீய வேத சாஸ்திரங்களுக்கு முரணான மதங்கள் நாஸ்திக மதங்கள். அவைகளை அனுஸரித்தால் நமக்கு க்ஷேமம் கிடையாது.

எந்த அரசன் தன் பிரஜைகளை தர்ம வழியில் நடத்தாமல் அவர்களிடமிருந்து தீர்வை வாங்குகிறானோ அந்த அரசன் தான் செய்த புண்யங்களையும் இழந்து பிரஜைகள் செய்யும் பாபங்களை ஏற்கிறான்.

ஸாதுக்களுக்குள் ஒருவருக்கொருவர் ஸந்திப்பது இருவருக்கும் நன்மை. தவிரவும் அவர்களுடைய ஸம்பாஷணை மற்ற ஜனங்களுக்கும் நன்மையைக் கொடுக்கும். இந்திரியங்களையும், மனதையும் அடக்காதவன் வனத்திலிருந்தாலும் அவனுக்கு பயம் தான். சாந்தியிருக்காது. அவைகளை அடக்கி ஆத்ம விசாரம் செய்பவன் கிருஹத்திலிருந்தாலும் அவனுக்கு பயமில்லை. சாந்தி கிடைக்கும்.

பெரியோர்களுடைய ஸங்கம் முக்திக்கு வழிகாட்டும். ஸ்த்ரீ முதலான உலக விஷய ஆசையுள்ளவர்களின் சேர்க்கை ஸம்ஸார பந்தத்தைக் கொடுக்கும்.

மஹான்களான பெரியோர்கள், ஸமபுத்தி, சாந்தி, கோபமின்மை எல்லோருக்கும் நன்மை செய்தல் முதலான நற்குணங்களுடையவர்கள்.

பகவானுடைய அவதாரமான ருஷப தேவருடைய புத்ரர் ஜடபரதர் என்ற பிரம்மக்ஞானி அரசாஷி செய்ய ஆரம்பமான பிறகுதான் முன்பு அஜநாபம் என்ற பெயரில் இருந்த இந்த தேசம் பாரத தேசம் என்று பெயர் பெற்றது. (பாகவதம் ஐந்தாவது ஸ்கந்தம்)

மஹான்களுக்குக் கெடுதல் செய்து அவர்கள் பொறுத்துக் கொண்டிருந்தாலும் செய்தவனை அழித்து விடும்.

இந்த பாரத தேசம் தான் கர்மக்ஷேத்ரம் என்பது. இங்கு தான் வர்ணாச்சிரம தர்மங்கள் உண்டு. மற்ற இடங்கள் போக பூமிகள். அஹிம்ஸை முதலான ஸாதாரண தர்மங்கள் எங்கும் உண்டு. மற்ற இடங்களிலும் வைதிக தர்மங்களை செய்தால் நல்லதே.

பாரத தேசத்தில் பிறந்தவர்கள் புண்யம் செய்தவர்கள். பகவானுடைய அனுக்ரஹத்தைப் பெற்றவர்கள். ஏனெனில் இங்கு தான் பகவானைக் குறித்து பல விதத்தில் பக்தி செய்ய முடியும். ஆகையால் நாங்களும் பாரத தேசத்தில் பிறக்க விரும்புகிறோம் என்று தேவர்கள் கூறுகிறார்கள்.

பெருத்தல், இளைத்தல், வியாதிகள், கவலைகள், பசி, தாகங்கள், பயம், கலகம், ஆசை, மூப்பு, தூக்கம், ஸந்தோஷம், கோபம், துக்கம், கர்வம், பிறரை அவமதித்தல், முதலான தர்மங்கள் சரீர அபிமானமுள்ள அக்ஞானிகளுக்கே தவிர ஞானிக்கு இல்லை.

புண்யங்களைச் செய்து பாபங்கள் முழுவதையும் போக்கிக் கொள்ள முடியாது. கர்மாவைச் செய்பவன் அக்ஞானியானதால் திரும்பவும் பாபத்தில் பிரவிருத்தி வரலாம். ஆத்மக்ஞானம் ஒன்றாலேயே பாபம் முழுமையாக நீங்கும்.

வியாதியுள்ளவன் ஔஷதம் சாப்பிடுவதுடன் பத்யமும் சேவிப்பது போல் புண்யங்களையே செய்து கொண்டும், பாபங்களைச் செய்யாமலும் இருந்தால் நாளடைவில் மனச்சுத்தியால் ஞானம் ஏற்பட்டு பாபம் முழுமையாக நீங்கும்.

கள் குடத்தை நதீ ஜலம் சுத்தம் செய்யாது. அதுபோல் பக்தியின்றிச் செய்யும் பிராயச்சித்த கர்மாக்கள் பாபத்தை நீக்காது.

புத்ராதிகளின் பெயராக இருந்தாலும், பரிஹாஸத்திற்காகச் சொன்னாலும், ராக ஆலாபனை முதலான வகையில் ஸ்வபாவமாகச் சொன்னாலும், நிந்தை செய் வதாகச் சொன்னாலும் நாராயணா, ராமகிருஷ்ணா, சிவ என்று அர்த்தம் தெரியாமல் பெயரளவில் சொன்னாலும் ஸகல பாபங்களும் நீங்கும்.

கீழே விழுந்தோ, தடுக்கியோ, இடித்தோ, பிராணிகள் கடித்தோ, பொசுக்கியோ, அடித்தோ, எந்த நிலையிலேனும் தன்னை அறியாமல் பகவானுடைய நாமத்தைச் சொன்னாலும் பாபம் நீங்கும். நரகத்தை அடைய மாட்டான்.

பாபங்களில் பெரியது, சிறியது என்று உண்டு. அதற்குத் தகுந்தபடி, பிராயச் சித்தங்களும் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன. அவைகளை அறிந்து தவம், தானம், ஜபம் முதலான புண்யங்களைச் செய்தால் பாபங்கள் நீங்கும். ஆனால் மறுபடியும் பாபம் செய்யக் காரணமான வாஸனையைப் (ஸம்ஸ்காரம் நீண்ட கால அப்யாஸம்) போக்காது. பாபங்களையும், வாஸனைகளையும் பகவானுடைய பக்தி ஒன்றே போக்கும்.

உயர்ந்த ஔஷதம் அறியாமல் எதிர்ச்சையாகச் சாப்பிட்டாலும் அதன் பலனைக் கொடுக்கும். ஒரு மந்திரம் அதன் தத்வம் தெரியாமல் ஜபம் செய்தாலும் பலனைக் கொடுக்கும். அது போல் பகவானுடைய நாமாவும் பொருள் தெரிந்தோ, தெரியாமலோ எந்த விதத்தில் சொன்னாலும் பாபங்களைச் போக்கும். மேலும் பகவானுடைய நாமம் என்று தெரியாமலோ, தெரிந்தோ சொன்னாலும் நெருப்பு விறகுகளை எறிப்பது போல் பாபங்களைச் போக்கி விடும்.

தன்னுடைய காரியம் நிறைவேற வேண்டுமென்று நினைக்கும் மனிதன் பிறருடைய கஷ்டத்தைக் கவனிக்க மாட்டான். பணம் ஸம்பாதிப்பதிலுள்ள சிரமத்தை அறிந்தவன் பிறரிடம் யாசிக்க மாட்டான். வெட்கத்தை விட்டு கூனிக் குரிகி சிரமத்தால் யாசிப்பவனுடைய கஷ்டத்தை அறிந்தவன் சக்தி இருந்தால் இல் லையென்று சொல்ல மாட்டான்.

ஸத்வ குண. ரஜோ குண, தமோ குணங்கள் பிரகிருதி பரிணாமமான மனதைச் சேர்ந்தவை. ஆத்மாவுக்கு குணங்களில்லை. ஆத்மா அவைகளுக்கு ஸாக்ஷி மாத்திரமாக உள்ளது. இவ்வித மறிந்தவனுக்கு ஸம்ஸார பந்தமில்லை.

நதியின் பிரவாஹ வேகத்தால் மணல்கள் கூடுவதும், பிரிவதும் எவ்விதமோ, நெல் பொரிக்கும் பொழுது பொரிகள் ஒன்றோடொன்று கூடிப் பிரிவது போலும் பிராணிகள் மாயைக்குக் கட்டுப்பட்டு கர்மாக்களைச் செய்து கர்மாக்களின் பலனுக்குத் தக்கபடி ஈச்வரன் பிராணிகளைச் சேர்த்தும், பிரித்தும் வைக்கிறார். இது குழந்தையின் விளையாட்டுப் போல் ஈச்வரனுடைய லீலை.

ஒரு தேஹத்திலிருந்து மற்றொரு தேஹம் உண்டாகிறது. விதையிலி ருந்து மரம் மரத்திலிருந்து விதை என்பது போன்று தேஹியான ஜீவன் உண்டாவது இல்லை. தேஹம் நிலையில்லாதது போல் வீடு, மனைவி, தனம் போக்ய வஸ்துக்கள், பூமி, ராஜ்யம் எல்லாம் நிலையில்லாதவையே. இவைகள் எல்லாம் சோகம், மோஹம், பயம் இவைகளுக்குக் காரணமானவை.

ஆகாயத்தில் தோன்றும் பட்டணம் போலும், ஸ்வப்னத்தில் தோன்றும் பொருள்கள் போலும் உலகமே மாயையின் தோற்றமே. கடையிலுள்ள ஸ்வர்ணம் முதலான பொருள்கள் பல கைகளில் மாறுவது போல் ஜீவனும் பல ஸரீரங்களில் ஸஞ்சாரம் செய்கிறான். இவ்வித சரீர தர்மங்களால் ஸாக்ஷியான ஆத்மாவுக்கு கிரியையோ, அதன் பலனோ ஸம்பந்தமில்லை.

மனிதானகப் பிறந்தும் ஆத்ம ஞானத்தை ஸம்பாதிக்க வில்லையானால் ஒரு காலும் சாந்தி கிடையாது.

பகவானிடம் பக்தி செய்து ஞான வைராக்யங்களை அடைந்தவர்களுக்கு வேறு ஆசையிருக்காது.

பதிவிரதா ஸ்திரீகளுக்கு பர்தா ஸந்தோஷப்படும்படி நடந்தால் அவர்களு க்கு ஸகல இஷ்டங்களும் பகவானுடைய கருணையால் கிடைக்கும்.

ஸர்வ பிராணிகளுடைய மனதிலும் இருக்கும் வாஸுதேவனே, வெளியில் பல ரூபங்களுடன் பல தேவதைகளாக ஆவர்திக்கப் படுகிறார். விவேகிகளான பதிவிரதா ஸ்திரீகள் சாஸ்திரத்தில் சிரத்தையுடன் தங்கள் பர்தாவயே வாஸுதேவனாகப் பாவித்து சுச்ரூஷை (பணிவிடை) செய்து நற்கதியடைகிறார்கள்.

ஒருவனுக்கு பதிவிரதையான பத்நியாலேயே கிரஹஸ்தாசிரமம் உத்தமமாக அமைகிறது. அவ்வித மனைவியாலேயே தர்மம், அர்த்தம், காமம், என்ற புருஷார்த் தங்கள் கிடைக்கின்றன. ஆகையால் அவளை புருஷன் ஸந்தோஷமாக இருக்கும் படி நடத்த வேண்டும். அனுகூலமான பத்நியாலேயே புருஷன் சிரமமான ஸம்ஸார ஸமுத்ரத்தை ஸுலபமாகத் தாண்டுகிறான். வேதமும் பத்நியை புருஷனின் சரீரத்தில் பாதி என்று கூறுகிறது. ஸம்ஸார பாரத்தை மனைவியிடம் ஒப்புவித்து விட்டு புருஷன் கவலையின்று இருக்கிறான்.

மற்ற ஆச்ரமிகள் இந்திரியங்களை ஜெயிக்க கடுமையான தபஸ், ஸமாதி மோகம் முதலானவைகளைத் தேடுகிறார்கள். கிருஹ்சஸ்தாசிரமத்திலுள்ளவன் அனுகூலமான பத்நியால் ஸுலபமாக இந்திரியங்களை ஜயித்து விடுகிறான். இவ்வித உத்தம ஸ்திரீகளுக்கு புருஷனால் ப்ரத்யுபகாரம் செய்து ஈடு செய்யவே முடியாது.

துஷ்ட ஸ்திரீகள் - தாமரை போல் முகம் மலர்ந்திருக்கும், பேச்சு காதிற்கு அமிர்தம் போலிருக்கும். மனது கூர்மையான கத்தி போலிருக்கும். இவர்களுடைய செயல்களை ஒருவராலும் அறிய முடியாது. தன் காரியத்திலேயே கவனமுள்ளவர் களுக்கு (ஸ்திரீகளுக்கு) வேறு ஒருவரிடமும் நிலையான பிரீதியிருக்காது. இவ்வித மானவர்கள் பணம் முதலானவைகளைக் கருதி தன் பர்தாவையோ, புத்ரன், ஸஹோதரன் இவர்களையோ கொல்லவோ, பிறரைக் கொண்டு கொல்லச் செய்ய வோ தயங்க மாட்டார்கள்.

உலகத்தில் தேவர்கள், அஸுரர்கள், மனுஷ்யர்கள் மற்றும் ஸகல பிராணிக ளுக்கும் ஸுகம், துக்கம், லாபம், நஷ்டம் முதலான விசித்ரமான பலன்கள் ஏற்படுவதற்குக் காரணம் எது என்று யோசித்தால் சிலர் காலம் என்றும் கர்மம் என்றும் ஸத்வ குணம், ரஜோ குணம், தமோ குணங்கள் என்றும் பலவகையாகவும் சிலர் ஈஸ்வரன் என்றும் கூறுகிறார்கள். இவை எல்லாமே காரணங்களாக சாஸ்திர ங்களில் கூறப்பட்டுள்ளன. ஈச்வரனைச் சொன்னால் எல்லோரிடமும் ஸமபுத்தியு ள்ள அவர் ஒருவனுக்கு ஸுகத்தையும் ஒருவனுக்கு துக்கத்தையும் கொடுத்தால் அவர் ஜீவர்களைப் போல் பக்ஷபாதமுள்ளவர் என்று ஆகும். பக்ஷபாதமுள்ளவர் ஈச்வரனாக மாட்டார். நிர்குணமற்றக் காரணங்களோ ஜட வஸ்துக்கள். அவரவர் கர்மாக்களை அறிந்து பலன் கொடுக்க முடியாது. ஆகையால் உண்மையில் அவர வர்களுடைய முன்செய்த புண்ய பாபங்களே காரணம். ஈச்வரன் அவைகளை அனுஸரித்து தன் மாயா சக்தியால் அவைகளை அறிந்து அவைகளுக்குத் தக்க சரீரங்களை அளித்து தகுந்த தேச, காலங்களில் ஸத்வ, ரஜோ, தமோ குணங்களைத் தூண்டி அதன் மூலம் பலனை அளிக்கிறார். தேவர்களுக்கு புண்ய பலனை அளிக்க ஜயம், லாபம், ஸுகங்களையும் அவர்களுக்கே சில சமயம் பாப பலனை அளிக்க அபஜயம், நஷ்டம், துக்கம் இவைகளையும் இது போலவே அசுரர்களுக்கும் மற்ற பிராணிகளுக்கும் பலனைக் கொடுக்கிறார். ஆகையால் அவருக்கு பக்ஷ பாதம், கருணையில்லாதவர் என்ற தோஷங்கள் கிடையாது. மழை பெய்வது எல்லோ

ருக்கும் ஸமமானாலும் நெல் விதைத்தவனுக்கு நெல்லும் முள் விதைத்த வனுக்கு முள்ளும் உண்டாவதால் மழைக்கு குண தோஷங்கள் இல்லாதது போல் என்று அறியவும்.

பக்தி என்பது பகவானை இடைவிடாது மனதில் நினைத்துக் கொண்டிருப்பது. அவ்வித நினைவு பகவானிடம் விரோத புத்தியாலேயோ, அதின்றியோ, பயத்தாலேயோ, ஸ்நேஹம், காமம் இவைகள் எந்த விதத்தினாலே யாவது பகவானை இடைவிடாது நினைக்கலாம். அதனால் அவருடைய அனுக்ரஹத்தைப் பெறலாம். சாதாரணமாக மனிதனுக்கு வேறு ஒருவன் தன்னை ஸ்துதி செய்தாலும், உபசரித்தாலும் ஸந்தோஷமடைகிறான். அதுபோல் ஒருவன் தன்னை தூஷித்தா லும் அவமரியாதை செய்தாலும் வருத்தமோ கோபமோ அடைகிறான். அதற்குக் காரணம் மனிதனுக்கு சரீரத்தில் நான் என்று அபிமானம் இருப்பதுதான். பகவானுக் குத் தன்னுடைய மாயா சரீரத்தில் அபிமானம் கிடையாது. அதனால் தன்னை நினைப்பவர்கள் யாராயினும் தன் நினைவே பக்தியாகையால் அவர்களுக்கெல்லாம் நற்கதியளிக்கிறார்.

உதாரணமாக - கோபிகைகள் பகவானிடம் காமத்தாலும், கம்ஸன் பயத்தாலும், சிசுபாலன், பௌண்டரக வாஸுதேவன் முதலானோர் த்வேஷத்தாலும், யாதவர்கள் ஞாதி பந்து என்ற ஸம்பந்தத்தாலும், பாண்டவர்கள் ஸ்நேஹத்தாலும் நாரதர் முதலானோர் பக்தியாலும் நற்கதி அடைந்தார்கள்.

எவ்விதத்திலாவது இடைவிடாது பகவச் சிந்தனையே பக்தி. அதுதான் முக்திக்கு வழி.

ஸம்ஸாரத்தில் பத்நீ, புத்ராதிகளுடைய கூட்டுச் சேர்க்கை அவரவர்களு டைய முன் கர்மாக்களை அனுஸரித்து தண்ணீர் பந்தலில் கூடும் கூட்டம்போல் நிலையி ல்லாதது சிறிது காலமே.

ஆத்மா என்பது சரீரம், இந்திரியங்கள், மனம், புத்தி, பிராணன் இவைகளைக் காட்டிலும் வேறானது. ஆத்மாவில் கிரியை கிடையாது. ஒருவனுக்குக் கண் சுழலும் பொழுது ஊரே சுழலுவதுபோல் தோன்றுகிறது. அது போலவே சரீரம் முதலானவை களிலுள்ள குணங்கள் ஆத்மாவில் உள்ளது போல் தோன்றுகிறது. அது பிரமமே.

ஆத்மாவுக்கோ அழிவில்லை. சரீரமோ அழியக் கூடியது. தடுக்க முடியாது. ஆகையால் விவேகியானவன் மரணத்தைக் குறித்து வருந்த மாட்டான்.

அக்ஞானத்தால் சரீரத்தையே ஆத்மாவாக நினைத்து அதனால் எப்பொழு தும் பயந்து கொண்டிருக்கும் மனிதன் உலகப் பற்றை விட்டு தனிமையாக இருந்து ஹரியை சரணமடைந்தால் பயம் நீங்கும்.

பூர்வ ஜன்ம வாஸனையால் பகவானிடம் பக்தி ஏற்படும். சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவை அர்சித்தல், நமஸ்காரம், கர்மார்ப்பணம், ஸக்யம், தன்னையே அர்பணம் செய்தல் என்ற முறையில் பக்தி செய்வதே உயர்ந்த அறிவு.

விவேகமுள்ளவன், மனித ஜன்மம் புண்யத்தால் கிடைத்திருக்கிறது, நிலையில்லாதது ஆகையால் சிறு வயதிலிருந்தே பகவானுடைய பிரீத்திக்கான தர்மங்களைச் செய்ய வேண்டும் என்று நினைத்துச் செய்து ஜன்மத்தைப் பயனுள்ளதாகச் செய்து கொள்ள வேண்டும்.

ஒரு தடவையேனும் பக்தியுடன் கிருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களை நினைத்தால் ஸர்வ பாபங்களும் நீங்கி விடும். நினைப்பவர்கள் எமனையோ பாசக் கயிறுடன் கூடிய எமதூதர்களையோ ஸ்வப்னத்திலும் பார்க்க மாட்டார்கள்.

பகவானுடைய பிரஸாதத்தையடைய பணம், உயர்குலம், அழகு, தபஸ், படிப்பு, சாஸ்திராப்யாஸம், இந்திரியப் பலம், புருஷ யத்னம், நல்ல அறிவு, யோகங்கள் தேவையில்லை. பக்தியிருந்தால் போதும். முற்கூறிய குணங்கள் இல்லாத கஜேந்திரனுக்கு பகவான் அனுக்ரஹம் செய்ததால் இதை அறிகிறோம்.

ஸகல தனம், குலம் முதலான ஸம்பத்துக்களும் இருந்து பகவானிடம் பக்தியில்லாத கெர்வமுடைய பிராமணனைக் காட்டிலும், தன்னுடைய சரீரம், மனம், இந்திரியங்கள், பிராணன், செயல் எல்லாவற்றையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்த நாயாடி (நாய் மாம்ஸம் சாப்பிடுபவன்) மேலானவன். இவன் தன்னையும், தன் குலத்தையும் பரிசுத்தம் செய்தவனாகிறான்.

முற்கூறிய பிராமணன் தன்னையே பரிசுத்தம் செய்து கொண்டவனாக மாட்டான். குலத்தை எவ்விதம்?

பகவான் எல்லா விதத்திலும் ஸம்பூர்ணன். மற்றவரிடமிருந்து ஒன்றையும் எதிர் பார்க்க வேண்டியதில்லை. இருந்தாலும் பக்தர்கள் கொடுப்ப தைக் கருணையால் ஏற்றுக் கொள்கிறார். முகத்திர்க்குச் செய்யும் அழகு பிரதி பிம்பத்தில் அழகை உண்டு பண்ணுவது போல் பகவானுக்குச் செய்யும் உபசார பலன் செய்பவனுக்கே வருகிறது. பகவானிடம் பலனை எதிர்பார்த்து ஸேவை செய்பவன் பக்தனில்லை, வியாபாரி. பக்தனுடைய ஸேவையை அனுஸரித்துப் பலனளிப்பவன் ஸ்வாமியுமில்லை. பக்தன் நிஷ்காமனாக ஸேவை செய்ய வேண்டும். (பிரேமயுடன்) ஸ்வாமி கருணையால் பலனளிக்க வேண்டும்.

வழியில் தவறிய பொருளும் நல்ல அதிருஷ்டத்தால் காப்பாற்றப்பட்டும் கிடைத்துவிடும். வீட்டிலிருந்தாலும் நல்ல அதிருஷ்டமில்லையேல் மறைந்து விடும். நல்ல அதிருஷ்டத்தால் வனத்தில் அனாதியாக இருந்தவனும் ஜீவிப்பான். அதில்லையேல் வீட்டிலிருந்தாலும் ஜீவிக்க மாட்டான்.

தனக்குரிய வர்ணாசிரம தர்மங்களைச் செய்து கொண்டே வந்தால் நாளடைவில் சுத்தனாகி ஸர்வ கர்ம தியாகம் செய்து ஞானியாவான்.

ஸ்திரீகளுக்கு பர்தாவே முக்ய தெய்வம். பர்தாவுக்கு அனுகூலமாக இருந்து பணிவிடை செய்வது, பர்தாவினுடைய பந்துக்களை அனுஸரித்து நடப்பது, பர்தா செய்யும் தர்மங்களுக்குக் கூட இருந்து தானும் செய்வது, வீடு, வீட்டிலுள்ள பொரு ள்களை சுத்தமாக வைத்துக் கொள்வது, இருக்கும் ஆடை, ஆபரணங்களால் அலங்காரம் செய்து கொண்டு வாட்டமில்லாமலிருப்பது, அடக்கம், வணக்கம், பிரியமாகவும், ஸத்யமாகவும் பேசுதல், பர்தாவின் குறிப்பறிந்து நடத்தல், ஸந்தோஷம், பதட்டமின்மை, வீட்டுக் காரியங்களில் நன்கு செய்யும் ஸாமர்த்தியம், இல்லற தர்ம அறிவு, ஜாக்கிரதை (கவனம்) சுத்தம், எல்லோரிடமும் ஸ்நேஹம் இவ்வித நற்குணங்களுடன் பர்தாவை ஹரியாக பாவித்து ஸேவை செய்து வந்தால் அவள் மரணத்தின் பிறகு பர்தாவுடன் வைகுண்ட லோகத்திற்குச் சென்று அங்கு லக்ஷிமியும், நாராயணனையும் போல் ஸுகமாக வாஸம் செய்வாள். ஆனால் பர்தாகள் குடி முதலான மஹா பாபங்களைச் செய்தவானக இருந்தால், மஹா பாபியாக இருந்தால் அவனை விட்டு விலகி விடலாம்.

நாலு வர்ணத்தார்களுக்கு வர்ஸாசிரம தர்மங்களும் பொது தர்மங்களும், மற்ற ஸங்கர ஜாதிகளுக்கும் குல பரம்பரையான தர்மங்கள், பொய், களவு, பிராணி ஹிம்ஸை முதலான பாபங்களை ஒருவருமே செய்யக் கூடாது. இவ்வித பலவித தர்மங்கள் பிறக்கும் பொழுதே உண்டான ஸ்வபாவத்தை அனுஸரித்து ஈஸ்வரனு டைய ஆக்ஞை ரூபமான வேத சாஸ்திரங்களால் நியமம் செய்யப் பட்டவை. யுகங்களை அனுஸரித்து சில தர்மங்கள் மாறுதலுடையவை.

தர்மங்களைச் செய்பவர்களுக்கு இம்மையிலும், மறுமையிலும் நன்மை யுண்டு.

வேத சாஸ்திர அப்யாஸத்துடன் கூடிய ஸதாசாரமுள்ள பிராமணர்கள் வஸிக்கும் இடம், தேசம் பகவானுடைய பிம்பமுள்ள க்ஷேத்ரம் உள்ள ஸகல தேசமும் தபஸ், வித்யை ஆசாரமுள்ள பிராமணர்கள் வஸிக்குமிடம் ஹரியின் பூஜை நடக்குமிடங்கள், கெங்கை முதலான நதிகள், புஷ்கரம் முதலான தடாகங்கள், பெரியோர்கள் வாஸம் செய்யுமிடங்கள், புராண பிரஸித்தமானவைகள். இவைகள் புண்யமான இடங்கள். இங்கு அடிக்கடி வாஸம் செய்தால் க்ஷேமம் உண்டாகும்.

தபஸ் வித்யை (வேத வித்யை) ஸந்தோஷம். பகவானுடைய ஸ்வரூபமான வேதத்தைப் படித்து மறக்காமல் தாரணை செய்து கொண்டிருக்கும் பிராமணன் புருஷர்களுக்குள் ஸத்பாத்திரம் (தானாதிகள் கொடுத்து உபசரிப்பதர்க்கு யோக்யதை உள்ளவன்).

வேத சாஸ்திரங்களுக்கு விரோதமான தர்மம் **விதர்மம்** (1) எனப்படும்.

தனக்கின்னாமல் மற்றவர்களுக்கு உரிய தர்மம் **பரதர்மம்** (2) எனப்படும்.

பௌத்தர் முதலானவர்களுடைய தர்மம் **உபதர்மம்** (3) எனப்படும்.

(பாபம்) டம்பத்திர்காகவோ, அதர்மத்தை தர்மமாக குதர்க்கமாக பொருள் படுத்திக் கூறிச் செய்யும் சலம் வஞ்சகமானது **சலம்** (4) எனப்படும்.

ஆசிரமத்திற்கு விரோதமாக தன்னிஷ்டப்படி செய்யும் தர்மம் ஆபாஸம் (5) **தர்மாபாஸம்** எனப்படும்.

இவ்விதமான ஐந்தும் அதர்மத்தின் பிரிவுகள். (கிளைகள்).

ஸ்வதர்மமே சாந்தியளிக்கும்.

பணமில்லாதவன், தர்மம் செய்யவோ, தீர்த்த யாத்திரை முதலானவை செய்யவோ தனம் யாசிக்கக் கூடாது. ஒருவன் மனதை ஸந்தோஷமாக எப்பொழுதும் இருக்கும்படி பழகிக் கொண்டால் அவன் எங்கிருந்தாலும் ஸுகமே, காலில் பாதரக்ஷை உள்ளவன் எங்கு நடந்தாலும் முள், கல் இவைகளால் துன்பம் உண்டாகாதது போலவே.

ஸ்திரீ ஸுகத்தையும் நாக்கு ருசியையும் அடக்காதவன் நாயைப்போல் அடிமையாகிறான். தன் தொழிலால் கிடைப்பதைக் கொண்டு ஸந்தோஷமடையா மல் விஷயங்களால் இந்திரியங்களை திருப்தி செய்து கொண்டிருக்கும் பிராமணனுடைய பிரும்மதேஜஸ், வித்யை, தபஸ், கீர்த்தி இவைகளும் ஞானமும் குறைந்து கொண்டேயிருக்கும்.

தனக்கு ஞானோபதேசம் செய்யும் குரு, பகவானுடைய ரூபம். அவரை மனிதன் என்று நினைத்து அவமதிப்பவன் செய்யும் தர்மங்கள் வீண் தான். யானை யைக் குளிப்பாட்டி புழுதியாக்கிக் கொள்வது போலவே.

கிருஹஸ்தன் தர்மங்கள் செய்யாமல் விடுவதும் பிரும்மசாரி தனக்குரிய விரதத்தை விடுவதும், வானப்ரஸ்தன் கிராமத்தில் வாழ்வதும், ஸந்யாஸி போக விஷயங்களால் இந்திரியப் ப்ரீதி செய்தலும் கூடாது. இவர்கள் ஆசிரம வேஷதா ரிகள்.

அக்ஞானத்தால் மோஹமடைந்த இந்த மூடர்களை தார்மிகர்கள் மனதில் தயவுடன் உபேக்ஷை செய்ய வேண்டும். (நிந்திக்கக் கூடாது).

பலனைக் கருதிச் செய்யும் தர்மங்கள் பிரவிருத்தி தர்மங்கள். ஈச்வரார்ப்பண மாக (மோக்ஷத்திர்க்காக) செய்யும் தர்மங்கள் நிவிருத்தி

தர்மங்கள் என்று இரு வகையாக வேதத்தில் கூறப்பட்டுள்ளன. பிரவிருத்தி தர்மங்களால் ஸம்ஸார பந்தமும், நிவிருத்தி தர்மங்களால் மோக்ஷமும் பலன்கள்.

மண்ணினால் செய்த சட்டி, பானைகள் மண்ணைத் தவிர வேறில்லை என்பது போல் பிரும்மத்தினிடமிருந்து உண்டான பிரபஞ்சம் பிரும்மத்தைத் தவிர வேறில்லை என்று அறிவது பாவாத்வைதம் எனப்படும். ஸகல தர்மங்களையும் பிரும்மார்ப்பணம் செய்வது கிரியாத்வைதம் எனப்படும். தன்னுடைய அர்த்தம் - பொருள், காமம் - அதை அனுபவிப்பது ஸகலருக்கும் உரிமையுள்ளது என்ற எண்ணம் வந்த பிறகு இதுவும் மாயையின் தோற்றம் என்று மறந்து தன்னிலையில் ஆத்ம ஸ்வரூபமாக இருக்க வேண்டும். இந்நிலையே முடிவானது. ஆனந்த நிலை.

ஒருவனுக்கு ஒரு பெரிய காரியம் ஆக வேண்டியிருந்தால் விரோதிகளோடும் ஸமாதானம் செய்து கொண்டு காரியம் முடிந்த பிறகு விரோதி களை ஒழிக்க முயல வேண்டும். பெட்டியிலுள்ள பாம்பு வெளியிலுள்ள எலியுடன் ஸமரஸம் பேசி பெட்டியில் துவாரம் போடச் செய்து பிறகு வெளியே வந்து எலியை விழுங்குவது போல் என்று ராஜ நீதி.

பிரபு என்பவன் எளியோரைக் காப்பாற்ற வேண்டும். ஸாதுக்கள் - நல்லவர் கள் நிலையில்லாத தன் பொருளாலும் பிராணனாலும் பிராணிகளைக் கருணை யால் காப்பாற்றுவார்கள். அதனால் பகவானுடைய அனுக்ரஹத்தைப் பெருவார்கள். வந்த அதிதிகளை ஜலமாவது கொடுத்து உபசரிக்காத கிரஹஸ்தனுடைய வீடு நரி வாழும் புதருக்கு ஸமானம். ஸர்வ தேவ ரூபியான விஷ்ணுவினுடைய முகம் போன்றவர்கள் பிராமணனும் அக்னியும்.

சரீரம் பௌதிகம், ஜடப்பொருள், ஆத்மாவோ அறிவுப் பொருள். அதற்கு பதி, புத்ரன் என்ற மற்றவைகளோடு ஸம்பந்தம் கிடையாது. ஸம்பந்த எண்ணம் அக்ஞானத்தாலேயே. உண்மையில் இல்லை.

அவசியமான தேவைக்கேற்ப பொருள் சேர்ப்பது பாபமில்லை. மன அடக்கமி ல்லாமல் அதிக ஆசையுள்ளவனுக்கு மூன்று லோகத்திலுள்ள பொருள்கள் கிடைத்தாலும் போதும் என்று திருப்தி ஏற்படாது. ஏழு த்வீபங்களுக்கு அதிபதியான அரசர்களும் போதும் என்று திருப்தி யடையவில்லை, என்று சரித்ரங்களால் அறிகிறோம். கிடைத்த பொருள்களால் திருப்தியடைபவன் ஸந்தோஷமாகவே இருப்பான். கிடைத்த அர்த்த காமங்களால் ஸந்தோஷமடையாதவன் ஸம்ஸார பந்தத்தில் கஷ்டப்படுவான். கிடைத்த பொருளால் ஸந்தோஷம் ஸம்ஸார முக்திக்கு வழியாகும். கிடைத்த பொருளால் ஸந்தோஷமடையும் பிராமணனுக்கு பிரும்மதேஜஸ் விருத்தியடையும். ஸந்தோதமில்லையேல் பிரும்ம தேஜஸ் போய் விடும்.

தன் ஜீவனத்திற்குக் கேடு வரும்படியான தானம் உயர்வில்லை. தான் ஜீவித்திருந்தால் தான் தானம், யஜ்ஞும், தவம் முதலான புண்ய காரியங்கள்

செய்ய முடியும். தான் ஸம்பாதிக்கும் பொருளை தர்மம், கீர்த்தி, அர்த்தம், போகம் பந்துக்கள் என்று ஐந்து பாகம் செய்து ஐந்து விஷயங்களுக்கு உபயோகிப்பவனுக்கு இவ்வுலகிலும் மறுஉலகிலும்  ஸந்தோஷம், ஸுகம் கிடைக்கும்.

ஸ்திரீகளை திருப்தி செய்விக்கவும், விளையாட்டாகவும், விவாஹ விஷயத் திலும், ஜீவனத்திற்காகவும், உயிருக்கு ஆபத்து ஏற்படும் ஸமயத்திலும் பசுக்கள், பிராமணர்கள் இவர்களைக் காப்பாற்றவும் இது போன்ற ஸமயங்களில் பொய் சொல்லலாம்.

மற்ற எல்லாவற்றையும் சுமப்பேன், பாபங்களில் கொடிய பாபம் பொய் சொல்லுதல் ஆகையால் பொய் சொல்லுபவனை என்னால் சுமக்க முடியாது என்று பூமிதேவி கூறினாள்.

ததீசி முனிவர், சிபி சக்ரவர்த்தி முதலான பெரியோர்கள் பரோபகாரம் செய்ய அரிதான பிராணனையே கொடுத்தார்கள். அப்படியிருக்க மற்ற பொருள்களை கொடுக்க நல்லவர்கள் யோசிக்கலாமா.

ஒரு குற்றம் செய்தவன் தனக்கு மேலான யோக்யன் மூலன் தண்டனை பெறுவது நன்மையே. தண்டனையளிப்பவன், மாதா, பிதா, நண்பன், ஸஹோதரன் இவர்களைக் காட்டிலும் மேலானவன்.

ஒருவன் அதிகமான பணமிருந்து அதனால் கெர்வமடைந்து மற்றவர்களை யும், பகவானையும் மதிக்காமல் அவமரியாதை செய்தால் அவனை நல்லவனாகச் செய்ய பகவான் பணத்தை ஏதாவது ஒரு வழியில் அழியச் செய்து அனுக்ரஹ செய்வார்.

மனிதனுடைய முயற்சி அவனுடைய முந்திய நல்லது, கெட்டது - புண்ய பாப கர்மங்களை அனுஸரித்தே லாப நஷ்டங்களைக் கொடுக்கும். எது போலவெ னில் - பசியால் வாடிய ஒரு நாய் வீடு வீடாக நுழைகிறது. ஒரு வீட்டில் அன்னம் கிடைக்கிறது. மற்றொரு வீட்டில் தடியடி கிடைக்கிறது. அது போலவே.

பகவானுடைய பிரேம பக்தர்கள், வீடு, பத்நீ, புத்ராதிகள், தனம், பிராணன் மற்றும் இவ்வுலக விஷயங்கள், மறு உலக ஸ்வர்காதி போகங்கள் மோக்ஷத்தை யும் கூட விரும்பாதவர்கள். அவர்கள் விஷயத்தில் பகவான் லக்ஷியைக் கூட விரும்பாமல் தன் ஸ்வதந்திரத்தையும் விட்டு பக்தர்களுக்காகவே காரியங்களைச் செய்வார். அவர் பக்த பராதீனன். பக்தர்களுடைய ஹிருதயத்தில் எப்பொழுதும் பகவானும், பகவானுடைய ஹ்ருதயத்தில் பக்தனும் இருப்பார்கள். பக்தனுக்குச் செய்யும் அபசாரத்தை பகவான் பொறுக்க மாட்டார். நிரபராதிகளான பக்தர்களுக்குச் செய்யும் கெடுதல் அவர்களை பாதிக்காமல் செய்தவனுக்கே கெடுதல் செய்யும்.

பிராமணர்களுக்கு தபஸ், வித்தை இரண்டும் க்ஷேமத்தைக் கொடுக்கும். ஆனால் அடக்கமில்லாமல் கர்வமடைந்தால் கெடுதலையே செய்யும்.

பகவத் பக்தர்களான ஸாதுக்கள் சிரமம் நேர்ந்தாலும் எந்த தர்மத்தையும் உறுதியுடன் செய்வார்கள். எதையும் தியாகம் செய்யத் தயங்க மாட்டார்கள்.

ஒருவன் இதுவரையில் நல்ல காரியங்களைச் செய்யவில்லையே என்று வருந்த வேண்டாம். போனது போகட்டும். இந்த எண்ணம் வந்த உடனேயே - இந்த உலகம் முழுவதும் மாயையின் தோற்றம். அந்த மாயாவியான நாராயணன் ஒருவரே ஸத்யம். அவரை நான் சரணமடைகிறேன் என்ற எண்ணம் கடைசி மரண காலத்தில் ஒரு நிமிஷத்தில் வந்தாலும் முக்தி பெறலாம். அதிக காலம் தேவையி ல்லை. இவ்விதமே கட்வாங்கன் என்ற ராஜா கடைசி காலத்தில் முகிதியடைந்தார்.

பகவானான ஸ்ரீ ராமனுக்கு ஸீதையாகிர தன் பார்யையிடம் பற்றுதலினால் துக்கம் நேர்ந்தது. அப்படியிருக்க அக்ஞானியான ஸாதாரண மனிதன் ஸ்திரி முதலான விஷயங்களில் பற்றுதல் வைத்தால் துக்கம் உண்டாகும் என்பது சொல் லத் தேவையில்லை.

பேராசையுள்ளவனுக்கு பூமியிலுள்ள தானியங்கள் ஸ்வர்ணம், பசுக்கள், ஸ்திரீகள் முழுவதும் கிடைத்த போதிலும் திருப்தி ஏற்படாது. அக்னியில் விறகுகளைப் போடப்போட விருத்தியாவது போல் விஷயங்களை அனுபவிக்க, அனுபவிக்க மேலும் மேலும் ஆசை விருத்தியாகவே செய்யும். ஸர்வப் பிராணிகளி டமும் அன்பு உள்ளவன் எப்பொழுதும் சந்தோஷமாகவே எங்கும் இருப்பான்.

சரீரம் வயதாகித் தளர்ந்தாலும் ஆசை தளர்வதில்லை. அதை விடுவது சிரமம் தான். ஆனால் ஸகல துக்கங்களுக்கும் காரணமான ஆசையை எவ்விதத்தி லாவது விட்டால்தான் மனிதன் க்ஷேமத்தை அடைய முடியும்.

தாயார், ஸஹோதரீ, பெண் யாருடனும் புருஷன் தனிமையில் இருக்கக் கூடாது. ஏனெனில் விவேகமுள்ளவனையும் கூட பலமுள்ள இந்திரியங்கள் கெட்ட வழியில் இழுத்துச் செல்லக் கூடியவை.

பகவானுடைய கதையை சொல்லும்படி கேழ்பவரும் சொல்லுபவரும், கூட இருந்து கேட்பவரும் பரிசுத்தமானவர்கள். பகவானுடைய பாதத்திலிருந்து உண்டான கங்கை பெயரைச் சொல்லுபவரையும், ஸ்நானம் செய்பவரையும், பானம் செய்பவரையும் பரிசுத்தம் செய்வது போலவே.

பிறக்கும் பொழுதே மரணம் நிச்சயம். இன்றோ அல்லது நூறு வருஷங்களுக் குப் பிறகோ ஏற்படலாம்.

நடப்பவன் ஒரு காலை முன் ஊன்றிக் கொண்டே, பின் காலை எடுப்பது போலும் புல் அட்டை முன் ஒரு புல்லைப் பிடித்துக் கொண்டே பின்னாலுள்ள புல்லை விடுவதுபோல் ஒருவன் மரணமடையும் பொழுதே அவனுடைய கர்மாவை அனுஸரித்து வரப்போகும் சரீரத்தை நினைத்துக் கொண்டே இருக்கும் சரீரத்தை விடுகிறான்.

ஒருவனுக்கு மரணம் நேரிடலாம் என்று தோன்றினாலும் பிழைக்க முயற்சி செய்வது கடமை.

ராஜ்யத்தில் ஆசையுள்ள அநேக அரசர்கள் தாயார், தந்தை, ஸஹோதரன், ஸ்நேஹிதர்கள் முதலானோர்களையும் கொன்று விடுவார்கள்.

பிராமணர்கள், பசுக்கள், வேதங்கள், தபஸ், ஸத்யம், மன அடக்கம், இந்திரிய ஜெயம், ஸத் காரியங்களில் சிரத்தை, பிராணிகளிடம் தயவு, பொறுமை, யாகங்கள் இவைகள் பகவானுடைய சரீரம் போன்றவை இவைகளைக் காப்பாற்ற வேண்டும்.

பூதனை என்ற ராக்ஷஸி கிருஷ்ணனைக் கொல்ல வேண்டும் என்றி நினைத்து விஷத்தைக் கொடுத்தாள். அதனாலேயே முக்தி யடைந்தாள் என்றால், கிருஷணனுடைய தாயார் போல பகவானுக்கு பக்தியுடன் பூஜித்து பழம் முதலான வைகளை அர்ப்பணம் செய்பவர்கள் முக்தியடைவார்கள் என்பதில் ஸந்தேஹமே யில்லை.

அநேகமாக உயர்குலத்தில் பிறப்பும், தனமும் சேர்ந்துவிட்டால் விவேகம் குறைந்து விடும். உடன் பரஸ்திரீ, சூதாட்டம், மத்யபானம் இவைகளும் ஏற்படும். மேலும் இவர்கள் - இந்த மாம்ஸமயமான சரீரத்தின் முடிவு, புழுவாகும் பிராணிகள் சாப்பிட்டால் அதன் மலமாகும். எரித்தால் சாம்பலாகும் இவ்வித சரீரத்தை மூப்பு, மரணம், அழிவில்லாதது. நித்யம் என்று நினைத்து இந்த சரீரத்தை வளர்ப்பதற்காக தயவின்றி பிராணிகளைக் கொன்று தின்கிறார்கள். பிராணி ஹிம்ஸையால் நரகம் உண்டு என்பதையும் அறியார்.

இந்த ஸரீரம், பிதா, மாதா, அன்னம் கொடுத்து வளர்ப்பவன் தன்னைக் காட்டிலும் பலசாலி, கூலி, சம்பளம் கொடுத்து அடிமையாக்கிக் கொள்பவன், அக்நி, நாய் இவை போன்றவைகளும் தனது என்று எண்ணுகிறார்கள். இவ்விதம் பொதுவான தேகத்தை நான், எனது என நினைத்து இதை வளர்க்க மாம்ஸ பக்ஷண த்திற்காக பிராணி ஹிம்ஸை செய்பவன் பாபியாவான்.

இவ்விதம் பணத்தால் அறிவிழந்த குருடனுக்கு அறிவூட்ட தாரித்ரியமே அஞ்ஜனம் (மை) ஆகும். ஏழ்மையால் கஷ்டத்தை அனுபவித்தவன், மற்ற பிராணிக ளுக்கு தீங்கு செய்ய நினைக்க மாட்டான். தன் காலில் முள் தைத்து வலியை உணர்ந்தவன் மற்றவர்களுக்கும் அது மாதிரி துக்கம் வரட்டும் என்று நினைக்க மாட்டான். ஏழ்மை வந்தால் கர்வம், பிறரை அவமதித்தில் முதலான

துர்குணங்கள் தனியே விலகும். ஏழ்மை என்பது அவனுக்கு தவம், போன்றது. புஷ்டியான ஆகாரமின்மையால் இந்திரியங்கள் அடங்கும். ஸாதுக்களுடன் சேர்க்கை ஏற்படும். கெட்டவர்களுடன் சேர்க்கை விலகும். ஸாது ஸங்கத்தால் பகவத் பக்தி ஏற்பட்டு நற்கதியடைவான்.

பகவானுடைய குணங்களைப் பேசுவதில் நாக்கும், கதைகளைக் கேழ்ப்பதில் காதுகளும், பூஜை செய்வதில் கைகளும், பாதங்களைத் த்யானம் செய்வதில் மனமும், பகவான் வாஸம் செய்யும் இடங்களை வணங்குவதில் சிரஸ்ஸும், பகவானுடைய மூர்த்திகளையும் பக்தர்களையும் தெரிசனம் செய்வதில் கண்களும் ஈடுபட வேண்டும். இதுவே பக்தியாகும்.

குரு பக்தியுள்ள சிஷ்யனுக்கு குரு எந்த ரஹஸ்யத்தையும் உபதேசம் செய்வார்.

மழைக்கால இரவுகளில் சந்திரன், நக்ஷத்திர கிருகங்கள் பிரகாசிக்காமல் மின் மினிப் பூச்சிகளே பிரகாசிக்கும். அதுபோல் கலியுகத்தில் வேத வைதீக தர்மங்கள் பிரகாசிக்காமல் நாஸ்திகர்களும், நாஸ்திக பாபங்களும் பிரகாசிப்பது போலுள்ளது.

மழைக்காலத்தில் வறண்ட நதிகளும் ஜலப் பெருக்கெடுத்து கரை கடந்து நாலா பக்கங்களிலும் ஓடுவதுபோல் கலியில் அடக்கமில்லாதவனுடைய உடலும் பொருள்களும் வழி தப்பிச் செல்லும். கலியில் மழையின் பிரவாஹத்தால் அணைகள் உடைக்கப் பட்டன. எது போல எனில் நாஸ்திகர்களின் சாதுர்யமான நாஸ்திகப் பிரசாரத்தால் வேத மார்கங்கள் கெடுக்கப் படுவது போல்.

சரத் காலத்தில் கரு மேகங்கள் முன்பு ஜலம் முழுவதையும் வர்ஷித்து விட்டு இப்பொழுது வெண்நிற மேகங்களாகப் பிராகாசித்தன. அது - ஸகல ஆசைகளையும் துறந்து தவம் செய்து பாபங்கள் நீங்கிய முனிவர்கள் போல் உள்ளது.

சரத் காலத்தில் மலைகளிலிருந்து சில ஸமயம் ஜலம் பெருகும். சில ஸமயம் பெருகாது. அது ஞானிகள் சில சமயம் கருணையால் உபதேசம் செய்வார்கள். சில சமயம் செய்ய மாட்டார்கள், என்பது போலுள்ளது.

மனுஷ்யர்களுடைய க்ஷேமத்திற்காகவே நிர்குணமான பரமாத்மா ஸகுண அவதார மூர்த்தியாகத் தோன்றுகிறார். அவரிடம் காமம், கோபம், பயம், ஸ்நேஹம், உறவு, ஐக்யம் - அபேதம், இவைகளில் ஏதாவது ஒரு விதத்தில் பகவானிடம் இடை விடாது மனதை ஈடுபடுத்தினால் முக்தியடையலாம்.

பர்தாவுக்கு வஞ்சகமின்றி சுச்ரூஷை செய்வதே ஸ்திரீகளுக்கு மேலான தர்மம் பர்தாவைச் சேர்ந்தவர்களையும் குழந்தைகளையும் போஷணை செய்ய

வேண்டும். துர்க்குணம், துரதிருஷ்டம். அதிக வயது, அறிவின்மை, ரோகம், தனமின்மை, இவ்வித தோஷங்கள் இருந்தாலும் அவனை விலக்கக் கூடாது. பக்தியுடனிருந்தால் புண்ய லோகம் கிடைக்கும். ஆனால் கள், குடி முதலான மகா பாபங்களிருந்தால் அவனை விட்டு விலகலாம்.

ஸ்திரீகளுக்கு வியபிசார தோஷம் ஏற்பட்டால் நரகம், இவ்வுலகில் இழிவு. ஜனங்களின் அறுவருப்பு, மற்றவர்களைக் கண்டு பயம். இவ்விதமான பல கேடுகள் குல ஸ்திரீகளுக்கு வியபிசாரத்தால் ஏற்படும். இது பகவானுடைய வாக்கு.

உலகத்தில் - பரஸ்பரம் - உபகாரம் செய்து கொள்ளுகிறார்கள். சிலர், இந்த உபகாரத்தால் ஸ்நேஹமோ தர்மமோ இல்லை வியாபாரம் போன்றது. தனக்கு உபகாரம் செய்யாதவர்களுக்கும் - மறு உபகாரத்தை எதிர்பாராமல் உபகாரம் செய்பவர்கள் சிலர். அவர்கள் தாய் தந்தையர்கள், கருணையுள்ள ஸாதுக்கள் இந்த உபகாரத்தால் தர்மமும், அன்பும் வெளியாகிறது. தனக்கு உபகாரம் செய்தவனுக்கோ, மற்றவர்களுக்கோ உபகாரம் செய்யாதவன். அந்த வரிசையில் ஞானிகள் உலக சிந்தையின்மையால் அவர்களுக்கு தர்மம், ஸ்நேஹம் ஒன்றுமில்லை. கேடுமில்லை. பகவான் பக்தானுக்ரஹம் செய்வதும் கருணையால் தான். பக்தர்களுக்கு சில ஸமயம் துன்பம் கொடுப்பதும் பக்தியை விருத்தி செய்யவே தான். உபகாரம் செய்தவர்களுக்கும் உபகாரம் செய்யாத அஞானிகளான ஜனங்கள் நன்றி மறந்தவர்கள். உபகாரம் செய்தவனுக்கு அபகாரம் செய்தவர்களும் அப்படியே. அவர்கள் குரு த்ரோகிகள். நரகத்தை அடைவார்கள்.

பகவானுக்கும் பிரும்ம ஞானிகளுக்கும் புண்யம், பாபம், ஸ்வர்கம், நரகம் ஒன்றும் கிடையாது. ஸங்கல்பமில்லாத அவர்களுடைய செயல்கள் மற்றவர்களு டைய பார்வையில் புண்யமாகவோ, பாபமாகவோ தோன்றலாம். அதனால் அவர்களுக்கு ஸம்பந்தம் கிடையாது. சுத்தாசுத்த ஸம்பந்தத்தால் அக்னிக்கோ, சூர்யனுக்கோ குண தோஷங்கள் கிடையாது. அது போலவே. ஆனால் தபஸ், ஞானம் இவ்வித சக்தி இல்லாதவன் அவர்களைப் போல் ஏதாவது கொடிய காரியங் களைச் செய்தால் அழிவு ஏற்படும். பரம சிவன் கால கூட விஷத்தை அருந்தினார். மற்றவன் செய்ய முடியுமா? பரசுராமன் தன் தாயை தந்தையின் வார்த்தையால் தந்தையின் தபோ பலத்தை அறிந்து வதம் செய்தார். தந்தை மறுபடியும் தாயை உயிர்பித்தார். ஆகையால் பெரியோர்களுடைய உபதேசத்தைக் கேட்டு அதன்படி நடக்க வேண்டும். அவர்களுடைய நடத்தைகளில் நல்லவைகளை மட்டிலும் தெரிந்து நடக்க வேண்டும்.

எல்லா நதிகளும் ஸமுத்ரத்தை அடைவது போல் எந்த தேவதையை ஆராதித்தாலும் ஸர்வ தேவதா ரூபமான பகவான் ஒருவரையே அடைகிறது.

பாசியால் மூடிய ஜலம் ஸமீபத்திலிருந்தும் பாசியை விலக்கி பாசியை விலக்கி ஜலத்தை உபயோகிக்கத் தெரியாமல் கானல் நீரை நோக்கி ஓடும் ஜனங்கள் போல் ஹிருதயத்தினுள் அக்ஞானத்தால் மறைந்திருக்கும் ஈசனை, அக்ஞானத்தை, ஞானத்தால் விலக்கி தரிசிக்கத் தெரியாதவர்கள் வெளியிலுள்ள தேவதையை நோக்கி அலைகிறார்கள்.

தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற ஸகல புருஷார்த்தங்களுக்கும் ஸாதனமான ஸரீரத்தைக் கொடுத்து வளர்த்து போஷித்த தாய், தந்தையர்களை சக்தியிருந்தும், சரீரத்தாலேயும், பணத்தாலும் அவர்களைக் காப்பாற்றாத புத்ரன் அவன் இறந்த பிறகு தன்னுடைய மாம்ஸத்தையே சாப்பிடும் படியான துர்கதி ஏற்படும் அவனுக்கு.

தாய் தந்தையர்கள், வயதானவன், பதிவிரதையான பார்யை, சிறு வயதான புத்ரன், குரு, பிராமணன், சரணாகதி அடைந்தவன் இவர்களை சக்தியுள்ளவன் காப் பாற்ற வேண்டும். இல்லையேல் அவன் உயிருள்ள பிணத்திற்கு ஸமம்.

அரணிக் கட்டையினுள் அக்னி இருப்பது போல பரமாத்மா ஸகல பிராணிக ளுடைய ஹிருதயங்களிலும் இருக்கிறார். அவருக்கு நண்பன், விரோதி என்பது கிடையாது. மனிதனுக்கு சரீரத்தில் 'நான்' என்ற அகங்காரம் இருப்பது போல் அவருக்குக் கிடையாது. அவருக்கு ஸமமானவன் மேலானவன், கீழானவன் கிடையாது. மாதா, பிதா, பார்யை, பெண், பிள்ளை, சரீரம், பிறப்பு, புண்யம், பாபம் முதலானவைகளும் கிடையாது. ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கு விளையாட்டாகப் போல் மாயையால் சரீரத்தை எடுத்துக் கொள்கிறார்.

ஸம்ஸார பயத்திலிருந்து விடுதலையடைய முனிவர்கள் எந்த பகவானை பூஜிக்கிறார்களோ, அந்த பகவானிடம் கோப ஸ்திரீகளுக்கு உறுதியான பிரேம பக்தி ஏற்பட்டது. ஆகையால் இவர்கள் மனிதர்களில் உயர்ந்தவர்கள். பகவானிடம் பகவா னுடைய கதையைக்கூட கேளாத பக்தியில்லாத பிராமண ஜன்மங்களும் வீண் தான். லஜ்ஜையை விட்டு இறைந்து செய்யும் எந்த கோபஸ்திரீகளுடைய ஹரிகதையின் கானம் மூன்று லோகங்களையும் பரிசுத்தம் செய்கிறதோ அந்த கோப ஸ்திரீகளுடைய பாத தூளியை எப்பொழுதும் வணங்குகிறேன் என்று பக்த உத்தவரின் வாக்கு.

அக்ரூரர் போன்ற பாகவதோத்தமர்களை க்ஷேமத்தை விரும்புவர்கள் தினமும் உபசரிக்க வேண்டும். கங்காதி புண்ய தீர்த்தங்கள், சிலா ரூபமான தேவர்கள் இவைகளை சிரத்தையுடன் முறைப்படி வெகு காலம் ஸேவித்தால் தான் சுத்தியேற்படும். பாகவதோத்தமர்களை தரிசனம் செய்த உடனேயே ஸகல பாபங்க ளும் நீங்கும்.

இவ்வுலகில் ஒருவரோடு ஒருவர் வெகு காலம் சேர்ந்திருப்பதில்லை. சரீரமே நிலையில்லாததால் ஒருவனாகவே பிறக்கிறான். ஒருவனாகவே

இறக்கிறான். தான் செய்த புண்ய, பாப பலன்களை தானே அனுபவிக்கிறான். பாபம் செய்தும் ஸம்பாதித்த பொருளை குடும்பத்டிலுள்ளவர்கள், ஜல ஜந்துக்கள் ஜலத்தைக் குடிப்பது போல் அனுபவிக்கிறார்கள். தான் செய்த பாபம் மட்டிலும் தனக்கே உள்ளது.

அறிதான மனிதப் பிறவி கிடைத்து அங்க ஹீனமில்லாமலிருந்தும் கிருகத் தில் - குடும்பத்தில் ஈடுபட்டு பகவானை பஜிக்காதவன் பாழுங் கிணற்றில் விழுந்த பசுவுக்கு ஸமானம்.

தனக்குரிய தொழிலால் கிடைத்ததைக் கொண்டு ஸந்தோஷத்துடன் தன் வர்ணாசிரம தர்மங்களை அனுஷ்டிக்கும் பிராமணனுக்கு அவனுடைய தர்மம் காமதேனுவைப் போல் ஸகல இஷ்டங்களையும் கொடுக்கும். திருப்தி இல்லாதவ னுக்கு தேவலோகம் கிடைத்தாலும் சாந்தி ஏற்படாது. திருப்தியுள்ள வன் ஏழையாயினும் மனச் சாந்தியுடன் ஸந்தோஷமாக இருப்பான்.

ஸ்வதர்மானுஷ்டானம் செய்து கொண்டு ஸர்வ பிராணிகளிடத்திலும் தயவுடனும், கர்வமில்லாமலும் சாந்தியுடனும் இருக்கும் ஞானவான்களான பிராமணர்களை நான் எப்பொழுதும் தலையால் வணங்குகிறேன், என்று பகவான் கூறுகிறார்.

பகவான் - பிரஜைகள் ஸந்தோஷமாக இருக்கும்படி பரிபாலனம் செய்யும் அரசன் எனக்குப் பிரியமானவன்.

ஒருவனுடைய ஸுக, துக்கங்களுக்கு மற்றவன் காரணமில்லை. அவனவன் செய்த புண்ய பாபங்களுக்குத் தக்கபடி ஸுக, துக்கங்களைக் கொடுத்து ஸுத்ரதாரி பொம்மைகளை ஆட்டிவைப்பது போல் பகவான் ஆட்டி வைக்கிறார். ஆத்மா ஒன்றே. பல சரீரங்களில் பலவாகத் தோன்றுகிறது. சரீரத்தை ஆத்மாவாக அக்ஞானத்தால் எண்ணுவதால் துக்கம் ஏற்படுகிறது. உண்மையான ஆத்மாவை அறிந்தால் அக்ஞானம் நீங்கி சரீர அபிமானம் போய் துக்கங்களும் அறவே நீங்கும்.

பகவான்: - பிராமணனுடைய ஸொத்தை கொஞ்சமாவது, பிரும்ம தேஜ ஸ்ஸு உள்ளவன் அபகரித்தாலும் அவனை அக்நியைப் போல் எரித்து விடும். அப்படியிருக்க அரசன் அபகரித்தல் நலமடைவானா? கால கூட விஷத்தையாவது உபாயத்தால் தடுக்கலாம். பிராமண ஸொத்தை அபகரித்தால் அதன் விளைவைத் தடுக்க முடியாது. விஷம் சாப்பிட்டவனை மட்டிலும் அழிக்கும். பிராமண ஸொத்தை அபகரித்தால் அவனையும் அவன் குலத்தையும் அழித்து விடும். பிராமணனை பயமுறுத்தி பொருளை அபகரித்தால் அபகரித்தவனுடைய மூன்று தலைமுறை அழியும். பலாத்காரமாக அபகரித்தால் பத்து தலைமுறை முன்பும், பத்துத் தலைமுறை பின்பும் தானும் அழிவான்.

பிராமணனுடைய பொருளை அபகரித்தால் நரகம் உண்டு, என்பதை அரசர்க ளும் அறிவதில்லை. தாதாவாகவும் குடும்பியாகவும் உள்ள பிராமணனுடைய பொருளை அபஹரிக்கும் பொழுது அவன் அழுத கண்ணீர் எத்தனை புழுதிகளை நனைக்குமோ அத்தனை வருஷங்கள் அரசனும் அவனைச் சேர்ந்தவர்களும் கும்பீ பாகம் என்ற நரகத்தில் துன்பத்தை அனுபவிப்பார்கள்.

பிராமணனுடைய ஜீவனத்திற்காக தானோ மற்றவரோ கொடுத்த ஸொத்தை அபகரித்தால் அறுபதாயிரம் வருஷங்கள் மலத்தில் கிருமியாகப் பிறப்பார்கள். பிராமணனுடைய பொருளை அபகரித்தால் ஆயுள் குறையும். அரசர்கள் ராஜ்யத்தை இழந்து ஸர்பங்களாகப் பிறப்பார்கள்.

நிருகன் என்ற அரசன் தான் அறியாமல் ஒரு பிராமணனுடைய பசுவை மற்றவருக்கு தானம் செய்ததால் அநேக வருஷங்கள் பாழுங் கிணற்றில் ஓணானா கப் பிறந்து கஷ்டத்தை அனுபவித்தான், என்று கூறினார்.

அடங்காத மாட்டிற்கு அடி உதவுவது போல் பணம் முதலானவைகளால் மதம் கொண்டவர்கள் சமாதானத்தை விரும்ப மாட்டார்கள். அவர்கள் விஷயத்தில் தண்டோபாயமே பலனளிக்கும்.

பகவான் லோக ஜனங்களுக்காக வேத தர்மத்தை உபதேசம் செய்தும், தானம் செய்தும், செய்தவர்களை உத்ஸாகப் படுத்தியும், நடிக்கிறார்.

பகவானுக்கு வேண்டியவன் வேண்டாதவன் என்பது கிடையாது. கல்பக விருக்ஷம் கேட்டதைக் கொடுப்பது போல் பக்தர்கள் கேட்டதைக் கொடுக்கிறார்.

பொறுமையுள்ளவர்கள் எதையும் பொறுப்பார்கள். தார்மிகர்கள் சிரமத்தைப் பாராமல் தர்மத்தைச் செய்வார்கள். கொடை வள்ளல்கள் எதையும் கொடுப்பார்கள். சரீரமோ அழியக் கூடியது. ஒருவன் தனக்கு சக்தியிருந்தும் நல்லோர்கள் புகழும்படி அழியாத புகழைச் சம்பாதிக்கவில்லையேல் அவன் வருந்தத்தக்கவன்.

ஸமபுத்தி உள்ளவர்களுக்கு தனக்கு வேண்டியவன், வேண்டாதவன் என்பது கிடையாது.

ஹரிச்சந்திரன், ரந்திதேவர், உஞ்சவிருத்தி பிராமணன், சிபி சக்ரவர்த்தி, மஹாபலி முதலானோர் அழியாத புகழை சம்பாதித்தவர்கள். (சரீரம் அழிந்தாலும்)

கிருஹஸ்தாசிரமத்திலிருந்து கொண்டு தர்மங்களைச் செய்து கொண்டும் நல்ல புத்ரர்களை அடைந்தும் பூர்வ கர்மத்தால் வந்த ஸுக துக்கங்களை பிராரப்த பலன் என்று பொறுமையுடன் அனுபவித்துக் கொண்டும் குடும்பத்தில்

அதிகப் பற்றுதலின்றி ஆத்ம விசாரம், பகவத் பக்தி செய்பவர்கள் கடைசியில் முக்தியடை வார்கள்.

பகவானையோ, பக்தர்களையோ ஒருவன் நிந்தை செய்தால் அங்கிருந்து சென்று விட வேண்டும். செல்லாமல் கேட்டுக் கொண்டிருந்தால் செய்த புண்யம் போய் நரகமும் ஏற்படும்.

வர்ணாசிரம தர்மங்களை அனுஷ்டிப்பவர்கள் பகவானுடைய ரூபமான குருவினுடைய உபதேசத்தாலேயே முக்தியடைவார்கள்.

யாகம், புத்ரன், தபஸ், ஸமாதி முதலான தர்மங்களைக் காட்டிலும் மேலான குரு ஸேவையாலேயே பகவான் அதிக சந்தோஷத்தையடைகிறார். குருவினுடைய அனுக்ரஹத்தாலேயே மனிதன் பூர்ணனாகி சாந்தியடைகிறான்.

பகவானுக்கு பக்தியுடன் சிறிது அர்ப்பணம் செய்தாலும் பகவான் அதைப் பெரிதாகவே ஏற்றுக்கொள்வார். பக்தியில்லாமல் எவ்வளவு அதிகமாகச் செய்தாலும் பகவானுக்கு திருப்தி ஏற்படாது.

துளஸி முதலான இலை, தாமரை முதலான புஷ்பம், இலந்தை முதலான பழங்கள், சுத்த தீர்த்தம் இவைகளில் ஏதாவதொன்றை பக்தியுடன் பகவானுக்கு அர்ப்பணம் செய்தால் அதை அவர் ஏற்றுக் கொள்கிறார்.

பகவானுடைய பாத சேவை செய்தால் ஸ்வர்கம், மோக்ஷம், பூலோகத்தில் ஸர்வ ஸம்பத்து எல்லாவற்றையும் அடையலாம்.

காற்று எவ்விதம் மேகங்கள், புல், பஞ்சு முதலானவைகளைச் சேர்த்தும் பிரித்தும் செய்கிறதோ அவ்விதமே பகவானும் கர்மாவை அனுஸரித்துச் சேர்த்தும் பிராணிகளைப் பிரித்தும் செய்கிறார்.

பக்தி முக்தியைக் கொடுக்கும். மனிதர்கள், உயர்ந்த பொருளாயினும் ஸமீபத்தில் உள்ளவைகளை ஆதரிக்க மாட்டார்கள். கங்கைக் கரையிலுள்ளவன் வேறு தீர்த்தத்தை நாடிச் செல்வான்.

சாஸ்திர முறைப்படி வர்ணாசிரம தர்மங்களை சிரத்தையுடன் ஈச்வரார்ப்பண மாகச் செய்து வந்தால் பாபங்கள் நீங்கி சித்த சுத்தி ஏற்பட்டு ஞானம் வரும். இது ஸுலபமான உபாயம், ஆகையால் சக்தியை அனுஸரித்து, யக்ஞ, தானங்கள் செய்து பண ஆசையையும், கிருஹஸ்தாச்ரமத்தால் தாரம், புத்ரன் விஷய ஆசை யையும், ஆத்ம விசாரத்தால் புண்ய லோக ஏஷணையையும் நாளடைவில் விட வேண்டும். (வித்தேஷணை, புத்ரேஷணை, தாரேஷணை, லோகேஷணை)

த்விஜர்களுக்கு மூன்று கடன்கள் - அவசியம் செய்ய வேண்டியவை. ருஷி ருணத்தை வேத அத்யயனத்தாலும், பிதிரு ருணத்தை ஸத் புத்ரனாலும், தேவ ருணத்தை யக்ஞாதிகளாலும் தீர்க்க வேண்டும். இல்லையேல் பாபம் வரும்.

மனிதனுக்கு ராஜ்யாதிகாரம் வந்தால் நண்பர்களையோ, பந்துக்களையோ ஏறிட்டுப் பார்க்க மாட்டான். தேவர்கள், புண்ய க்ஷேத்ரங்கள், தீர்த்தங்கள் இவைகள் தரிசனம், ஸ்நானம், அர்ச்சனம் இவைகளால் நாளடைவில் சுத்தியைக் கொடுக்கும். பெரியோர்களுடைய தரிசனம் உடனே சுத்தியளிக்கும்.

உலகத்திலுள்ள பிராணிகளுக்குள் பிராமணன் பிறப்பினால் மேலானவன், அத்துடன் தபஸ், வித்யை இவைகளுடன் கூடியவன் பகவானுடைய அம்சமாவான். அவ்வித பிராமணன் பகவானுக்குப் பிரியமானவன். பிராமணன் ஸகல வேத ஸ்வரூபம், பகவான் ஸகல தேவ ஸ்வரூபம். இதையறிந்தவர்கள் அவர்களை அவமதிக்க மாட்டார்கள். நிர்குணமான ஹரியை பஜித்தால் அவருடைய ரூபத்தைய டைவான்.

தன கர்வத்தால் ஹரியைப் மறந்தவனுக்கு அனுக்ரகம் செய்ய பகவான் நாளடைவில் பல வழிகளால் தனத்தை இழக்கச் செய்வார். தனமில்லாத அவனை பந்துக்கள் விலக்கி விடுவார்கள். பிறகு அவன் முயற்சியும் வீணான பிறகு பண ஆசையை விட்டு பாகவத கோஷ்டியில் சேர்ந்து பக்தனாவான். பிறகு பகவான் அனுக்ரகம் செய்வார்.

மனம், வாக்கு சரீரங்களால் செய்யும் ஸகல கர்மாக்களையும் பகவான் நாராயணனுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும்.

பகவானை சரணமடைந்தவனுக்கு பக்தி, பகவானுடைய அனுபவம், மற்ற உலகில் வைராக்யம் மூன்றும் ஸம காலத்தில் ஏற்படும். எதுபோலவெனில் - போஜனம் செய்பவனுக்கு ஸந்தோஷம், சரீர புஷ்டி, பசி நிவிருத்தி மூன்றும் ஒரே ஸமயத்தில் ஏற்படுவது போலவே.

ஸர்வ பிராணிகளிடம் பகவானையும், பகவானிடம் ஸர்வ பிராணிகளையும் பார்க்கும் ஞானி உத்தம பாகவதன். ஈச்வரனிடம் பிரேமையையும், பக்தர்களிடம் ஸ்நேஹத்தையும், மூடர்களிடம் கருணையையும், சத்ருக்களிடம் உபேக்ஷை - (அலக்ஷ்யம்) யையும் செய்பவர்கள் மத்ய பாகவதர்கள் (பக்தர்கள்). விக்ரஹத்திலேயே பகவானை பூஜை செய்து கொண்டு பக்தர்களைப் பூஜிக்காதவன் ஆரம்ப பக்தன்.

உலக விஷயங்களை அனுபவித்தாலும் ஸந்தோஷமோ, வருத்தமோ இல்லாமல் உலகமே மாயை என்று அறிந்து தன்னைச் சேர்ந்தவன், வேறானவன் என்று பேத புத்தியுல்லாமல் ஸர்வ பிராணிகளிடம் ஸம புத்தி ஸமமான பிரும்மம் ஒன்றே என்று அறிந்து பரம சாந்தியுள்ள்வன் பாகவதோத்தமன்.

பிரும்மம், உலகத்தை ஸிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் செய்யக் காரணமான தும் ஸத்வ, ரஜோ, தமோ குண ரூபமானதும் மாயை எனப்படும்.

பக்தியுடன் குரு ஸேவை செய்து அவரிடம் பாகவத தர்மங்களைக் கேட்டு அறிந்து அந்த தர்மங்களை ஈச்வரார்ப்பணமாகச் செய்து வந்தால் மாயையை ஜெயி க்கலாம்.

எந்த ஸத்ய வஸ்து நித்யமாக இருந்து உலகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரத்திற்கு இக் காரணமோ, எதர்க்குக் காரணம் கிடையாதோ ஜீவர்களிடம், ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளுக்கும் ஸாக்ஷியாக விளங்குகிறதோ, சரீரம், இந்திரியங்கள், மனம், பிராணன் இவைகள் எதனால் வேலை செய்கிறதோ உள்ளும், புறமும் எங்கும் நிறைந்தது எதுவோ அது தான் பிரும்மம். பர தத்வம் எனப்படும்.

ரோகியானவன் ரோக நிவிருத்தியாக ஔஷதம் தேவைப் படாமலிருப்பதர்க் காக ஔஷதத்தை ஸேவிக்கிறான். அது போலவே வேதமும், ஸர்வ கர்ம தியாகம் வருவதர்க்காகவே கர்மாக்கலை விதிக்கிறது. அக்ஞானி நிலையிலுள்ளவன் வைதிக கர்மாக்களைச் செய்யவில்லையேல் அதர்மத்தில் பிரவிருத்தி ஏற்பட்டு ஜனன மரணங்களை யடைந்து கொண்டேயிருப்பான்.

வைதிக கர்மாக்களை நிஷ்காமனாகச் செய்தால் - ஈச்வரார்பணமகாச் செய் தால் மோக்ஷத்தை அடைவான். வைதிக கர்மாக்களில் பிரவிருத்தி வருவதற்காக வே கர்மாக்களுக்கு வேறு பலன்கள் கூறப்பட்டுள்ளன.

பூமி பாரத்தை நிவிருத்தி செய்ய பகவான் கிருஷ்ண்னாக அவதரித்தார். தேவர்களாலும் முடியாத அத்புத கார்யங்களைச் செய்தார். தகாத முறையில் எக்ஞங்களைச் செய்பவர்களைத் தடுக்க புத்தராக அவதரித்து மாயா வாதம் செய்யப் போகிறார்.

கலியுக முடிவில் துஷ்ட அரசர்களைக் கொன்று தர்ம ஸ்தாபனம் செய்ய கல்கியாக அவதாரம் செய்யப் போகிறார்.

பகவான் குணங்களை அனுஸரித்து பிராமண, க்ஷத்ரிய, வைசிய, சூத்ர நாலு வர்ணத்தார்களைத் தன் முகம், தோள், தொடை, பாதம் இவைகளிலிருந்து ஸ்ருஷ்டி செய்தார்.

இவர்கள் தங்கள் பிதாவான பகவானை பஜிக்காவிடிலும் அவமரியாதை செய்தாலும் கீழ் நிலை யடைந்து நரகத்தையடைவார்கள்.

கலியுகத்தில் கிருஷ்ண பகவானை அறிவாளிகள் நாம ஸங்கீர்த்தத்தினா லேயே ஆராதிக்கிறார்கள்.

கலியுகத்தில் பகவானுடைய நாம ஸங்கீர்த்தாலேயே இஷ்ட ஸித்தி ஏற்படுவதால் பெரியோர்கள் கலியுகத்தைப் புகழ்கிறார்கள்.

ஸம்ஸாரத்தில் உழலும் மனிதர்களுக்கு ஸம்ஸார பந்தம் நீங்கி சாந்தியடைய பகவந் நாம ஸங்கீர்த்தனமே பெரிய லாபம்.

கலியுகத்தில் சில சில இடங்களில் பக்தர்களும், திராவிட தேசத்தில் தாம்பிர பரணீ, கிருதமாலா, பயஸ்விநீ (பாலாறு) காவேரீ முதலான நதி தீரங்களில் அதிகமாக பக்தர்கள் வாஸம் செய்வார்கள். அவர்கள் பகவானையே பஜித்துக் கொண்டிருப்பார்கள். ஆகையால் பக்தியைக் கருதி கிருத, த்ரேதா, த்வாபர யுகங்களிலுள்ளவர்கள் கலியுகத்தில் பாரத தேசத்தில் பிறக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள்.

கெங்கா ஸ்நானம், கீதா பாராயணம், காயத்திரீ ஜபம், துளஸீ, கோபி சந்தனம் தரித்தல், துளஸியால் ஸாளக்ராம பூஜை, ஏகாதசீ உபவாஸ விரதம், பகவந் நாம ஸங்கீர்த்தனம் இந்த எட்டையும் கலியுகத்தில் செய்து வந்தால் ஸுலபமாக பகவானுடைய பிரஸாதத்தால் சீக்கிரம் மோக்ஷத்தை யடையலாம்.

ஒருவன் மேன்மையடைய நற்குணங்களைத் தெரிது அதன்படி நடக்க வேண்டும். நற்குணங்களை அறிந்து கொள்ள குருவிடம் சாஸ்திராப்யாஸம் மட்டிலும் போதாது. பஞ்ச பௌதிகமான மரம், நதி முதலியன, மற்ற பிராணிகள் இவைகளில் இருக்கும் நல்ல தர்மங்களையும், நேரில் பார்த்து அறிந்து நற் குணங்களை விருத்தி செய்து கொள்ள வேண்டும். உதாஹரணமாக பூமியின் பொறுமை, வாயு, ஆகாசங்கள் எங்குமிருந்தும் மற்றப் பொருளுடன் ஒட்டாதிருத்தல் முதலியன.

நம் முயற்சியின்றியே துக்கம் முன் வினைப்படி வருவது போல் விஷய ஸுகமும் ஸ்வர்கத்திலும், நரகத்திலும் கிடைக்கும். ஸுகத்திர்க்காக வீண் முயற்சி செய்ய வேண்டாம்.

ஆனால் புண்யத்தைச் செய்து கொண்டிருந்தால் பலனான ஸுகம் தனியே வரும்.

தர்மங்களை ஈச்வரார்ப்பணமகாச் செய்ய வேண்டும். மனோ ஜயம், இந்திரய ஜெயம், பொறுமை முதலான ஆத்ம குணங்களை விருத்தி செய்து கொள்ள வேண்டும். வேதாந்த விசாரத்தில் அதிகப் பற்றுள்ளவன் கர்மானுஷ்டானத்தில் அதிக ஆதரவு செய்ய வேண்டாம். உலக வாழ்க்கையில் அதிகம் பற்றுதலின்றி இருக்க வேண்டும்.

தூக்கில் போடுவதர்க்கு அழைத்துச் செல்பவனுக்கு மற்ற உலக ஆசையிருக் காது. அது போல் சரீரம் நிலையில்லை என்று அறிந்த ஆத்ம ஞானிக்கு அர்த்த காமங்களில் விருப்பமிருக்காது.

புண்யத்தைச் செய்தால் சிறிது காலம் ஸ்வர்க்க ஸுகத்தை அனுபவித்து விட்டு மறுபடியும் பிறப்பு உண்டு. பாபத்தைச் செய்தால் நரகத்தில் துக்கத்தை அனுபவிக்க வேண்டி வரும்.

தத்வ ரீதியில் உண்மையில் புண்யம், பாபம், ஸ்வர்க்கம், நரகம், பந்தம், மோக்ஷம் என்ற வியவஹார மெல்லாம் அக்ஞான தெசையில் ஞானம் ஏற்பட்டால் எல்லாம் ஸ்வப்ன வியவஹாரம் போல் என்று அறியலாம்.

ஸாது ஸங்கத்தால் பக்தியை விருத்தி செய்து கொள்ள வேண்டும். ஸாத்விக ஆகாரம் முதலானவைகளால் ஸத்வ குணத்தை விருத்தி செய்து கொள்ள வேண்டும்.

அஹிம்ஸை, ஸத்யம், திருடாமை, (காமம், குரோதம், லோபம் இவைகளை விடுதல்) எல்லோரிடமும் ப்ரீதி, நன்மை செய்ய விருப்பம் இந்த தர்மங்கள் ஸகல மனிதர்களுக்கும் பொதுவானவைகள்.

பிராமண சரீரம் இவ்வுலகில் தர்மானுஷ்டானங்கள் செய்து சிரமத்தையடை ந்து பிறகு மோக்ஷமடைவதற்கே ஏற்பட்டது.

ஸ்வதர்மானுஷ்டானம் செய்து கொண்டிருக்கும் பக்தனான பிராமணன் ஸம்ஸார யோக க்ஷேமத்திற்கு கஷ்டப் படும் பொழுது அவனுக்கு உதவி செய்பவனுக்கு பகவான் ஆபத்துக்களை நிவிருத்தி செய்து அனுக்ரஹம் செய்வார்.

தீவிர வைராக்யமுள்ளவனுக்கு ஸந்யாஸ பூர்வமான ஞான யோகம். வைராக்யமில்லாதவனுக்கு கர்மயோகம். பகவானுடைய கதா சிரவணம் முதலானதில் சிரத்தையுள்ள ஸுமாரான வைராக்யமுள்ளவனுக்கு பக்தி யோகம்.

எவருடைய நாம ஸங்கீர்த்தனம் ஸகல பாபங்களையும் போக்குமோ, எவரை நமஸ்காரம் செய்தால் ஸகல துக்கங்களும் நீங்குமோ அந்த பரமாத்மாவான ஹரியை நமஸ்காரம் செய்கிறேன்.

**ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து**

**சுபமஸ்து**